ஸ்ரீ

# பகவான் ரமண சரித்திர ஸாரம்.

1938.

இஃது

# ஸ்ரீ பகவான் ரமண

பாதசேவகன்

மனவாசி

ராமஸ்வாமி அய்யரால்

பாடப் பெற்றது.

இரண்டாம் பதிப்பு.



பி. எஸ். ஜி. சி. ஐ. ஐ. அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1938.

# முகவுரை

பகவான் ஸ்ரீ ரமணனை உலகர்க்கறிவிக்கவும் வேண்டுமோ? சூரியனை யாரேனு மறிவிக்க துண்டோ? திருச்சுழி க்ஷேத்திரத்தில் ஜனித்துப் பதினேழாம் வயதில் ஸ்ரீ அருணாசல க்ஷேத்திரத்தை யடைந்து இன்னதென்றியப்பவொணு மஹா மோனனுய், கடவுளாய், கலியிலுலகர்க்குக் கலி நீக்கவேயுற்ற திருவருளின் அவதாரமாய், கேவலக்கடைக்கண்ணேக்கினலேயே கடைத்தேற்றுபவனுய், தன் கண்ணேக்கிற் பட்டார் தாழ்ந்தவராயினுந் தங்கமே யாக்குபவனுய், தன்னையறிதலே தவமெனப் பறைசாற்றி, சுந்தரத் திருமேனியனுய், செவ்வல் மருவுடைப்பாதனுய், பார்ப்பவர்க் குருவனேயல்லால் உண்மையிலுருக்கரைந்து நிழல்போலாடுபவனுய், ஸித்தபுருஷனுய், அவரவர் உபாஸனைக்குத்தக்கவாறு அங்கந்த மூர்த்தியாய் அருணைமலையின் அரிய தத்துவத்தை உலகர்க்கூட்டி, யவ்வருணையங் கடவுளேயாய், இன்னம் புகழவெல்லை யில்லானுய் விளங்கும் மூர்த்தியின் வைபவம் யாரால் வர்ணிக்க முடியும்.






அவரது சரித்திரத்தை வெகு அழகாய் ஸ்ரீ சுத்தானந்த பாரதி முதலியோர் எழுதியுள்ளார்.

இலக்கணமே படித்தறியாத யான் என்பக்திக்கு ஏற்றவாறு 1924-ம் வருஷம் ஏதோ எழுதினதை ஆப்தர்கள் பலவந்தத்தின்மேல் வெளியிடச் சம்மதித்தேன். அடங்கிய விஷயம் மிக்க ருசிகரமானதால் உரைக்கும் விதம் முக்கியமல்லவென்று நினைக்கிறேன். சிறுவர்கள் கும்மியாய்ப்பாடவே இதின் நோக்கமாதலால் இலக்கணக் கட்டைமீறியதால் பயமில்லை.

ஸ்ரீ பகவானின் சரித்திரத்தில் உற்பவ முதல் அன்னையாரின் சமாதிவரை முற்பகுதியாய்க் குறிக்கப்பட்டுள்ளது.

சிறுவர்கள் இதைப்பாடிக்கொண்டாடுவாராக.

மனவாசி,
27—2—1935

M. V. R.

## குருஸ்துதி.

மகவினைப் போற்றிடும் மாதாவு மல்ல
பகவனைக் காட்டு பவனும்—அகத்தில்
அகத்தினைக் காட்டி யருளும் ரமண
சகத்தி லுனக் காரே சமம்

## கும்மி

### நூல்

ரமண சரித்திர சாரக்கும்மி
ரமணிகாள் கூடியடியுங் கோடி
மனதிலவர் பாத மதியுங்கோடி யொரே
மனத்தராய் கனத்தனு ராகத்துடன்

## ஜனனத்தலம்.

1. திருச்சுழி தனிற் பிறந்து
தீச்சுழி தனைத் தவிர்ந்து
முனைச்சுழி தனிற் றோய்ந்த—முனிவன்
சரித்திர விசித்திரம்
சாற்றிடச் சற்றுமே
நற்றிற முளதோ—நானோர்

## பெற்றவர்

2. அன்னையழ கண்ணல் சுந்தரன்
பண்ணிய தவமதுவே
மண்ணுலகினிலின்னுருவுடன்
மைந்தனாகி வந்தான்

## ஜன்ம நக்ஷத்திரம்

3. கோஸலையின் மனங்குளிரக்
குமரன் பிறந்த கீர்த்தி
யுகங்களாகி மழுங்கிடவே
யுடிவு மிடமு மேங்கத்
திரும்பியவற்கு மஹிமையருளத்
திவ்ய தலத்தில் ஜனித்தான்
தனவன் மருகன் பழனிவேலவன்
தத்துவ ஞானியாக

## வாலிபம்

4. கேவல மானுட வியல்புக்
கேற்றதொரு சிசுப்போல்
ஆவலுடனன்னையிடம்
அதிகப்ரேமை காட்டி

5. குதலையாகி மதலையாகிக்
குரு சிறுவனாகி
குழலழகுங் கூரறிவுங்
கூறக்கோடியாகும்

6. சிறு வயதிற் றகப்பன் மறையச்
சிறிய தகப்பன் காப்பில்
முறுவலுடன் முனிவுகளை
மோனமுடன் பரித்தான்

7. சிறுவருடன் சிறப்பாகக்
கேளிக்கை யாவும்
ஒருமுகத்தோடாறு முகவ
னென்றுங் குறைவின்றி

8. பள்ளியிலே பயின்று கெட்டிக்
காரத்தனமு மோங்கத்
தெள்ளிய ஆறும் வகுப்பி
லாங்கிலேயந் தெரிந்தான்

9. ஈரெட்டாண்டு முடியும் வரை
யிவ்விதமே கடத்தி
வீரட்டாணனெனும் பெரும்பேர்
விரைவில் வரவேண்டி

அற்புதோதயம்

10. தலைமுறைக்கோர் தனையன்றுறக்கத்
துறவியொரு வனுரைக்கப்
பெருமொழியும் பலிக்கப்பெரிய
பாட்டனுமே யேக

11. பெரிய தந்தை துறந்து பல
ஆண்டுகளு மாகத்
தானுந் துறக்கத் தருணமிதைத்
தானறிந்தானில்லை.

12. தலைமுறைமை தழைத்திடவே
வலம் வருங் காற்றினமும்
தொன்னூல்வர் தமைத் தொழுது
தேம்பித் தேம்பியழுக

13. தனையறியா துவகையுமே
தழைக்க மனமு மாயத்
தரணியிலருணாசலந்தான்
திருவண்ணாமலையே

14. எனவொருவருரைக்கலுமே
யேங்கியுடனே தானும்

இனி நொடியில் விரைவனென
எண்ணமுந்தா னுதிக்க

15. இடையிடையே யிடைவிடாது
மோனமது தழைக்க
நடையுலகுக் கிடையூறிதென
நயமில் தமைய னுரைக்க

யாத்திரை

16. பள்ளிக்சேகும் பாவனைபோற்
பரந்த சனம் அருந்தி
பள்ளிச் சம்பள வெள்ளியிலோர்
பகுதியினைக் கொண்டு

17. தான்போகும் வகையதனைத்
தமர்களுணருமாறு
தந்தை நாடிப் போவனெனத்
தான் துணுக்கு வரைந்தான்

18. பார்புதுமை பகல் வண்டி
நேரந்தப்பி வரவே
யாரறிவாரீசனருள்
கனிந்து சுரந்துறவே

விருத்தம்

ராகம் :— சங்கராபரணம்.

## ரெயில் பிரயாணம்

19. தாவினன் யாவரும் தானறியா வண்ணம்
மேவினனங்கே மஹா மௌன மென்றயில்
கூவியு சாவினுங் கொஞ்சமு முணர்ந்திலன்
ஓவியம் போலவே யுண்முக மாகினன்

20. பெயர் நினைந்திடப் பேணி யிழுத்திடும்
உயிர்கொலியருணையை யுளத்தினுன்னியே
பெயர்விலாது நிறுத்திப் பிறிதென
வயருந்தன் தேக மறிந்திடலாயினன்

21. விழுப்புறம் வந்ததும் விழித்துமேயவன்
இழிந்திடப் புறமதிலைக வேரயில்
வழித்தனக் குறைவினல் வழிதனைக்கடக்க
விழித்தனன் காலினலீர் காததூரமே

## திருக்கோயிலூர்

22. சோர்ந்து நடந்தே சுகங் கெட நொந்து
சேர்ந்தா னறையணை நல்லூர்ச்சிலையேர்
ஊர்ந்தான் பரமனர் முன்னிலை தன்னில்
ஓர்ந்தான் சம்பந்தர் கண்டதோர் ஜோதி

23. கடந்தனன் பெண்ணையையடைந்தந்த
காசுரன்
மடிந்திடவாட்டியவத் திருக்கோயில்
விடந்தனைத்தாங்கும் விடையேறு மீசன்
மடந்தனிலன்னம் வழங்கவில்லையால்

24. ஊதியம் பெறவே வாத்திய மூதுமோர்
சூதிலாச் சுத்தன் றன் சோற்றுப்பட்டை
நீதியை யுணர்ந்து நிகரிலா அன்புடன் [யை
வேதியர்க் கிந்தவ னுய்ந்ததும் விந்தையே

25. நள்ளிரவில் நாடவோரிட மில்லாமலே
துள்ளிய பசியால் துடித்திட அங்கோர்
தெள்ளிய மறையோன் தெரிந்தில்லிருத்திப்
பிள்ளைபோற் பிரேமித்துபசாந்தி செய்
[தனன்

26. உளமது பூரித்துணர் வோங்கவே கரத்
தளவொரு கவளமு முட்செலாமலோர்
நிலமதிற் படுக்க நெட்டி யெறிந்ததப்
பலமிகு சத்திநி பாதவிசித்திரம்

27. காதினிற் பூண்டதன் கடுக்கனை மாறியப்
போதினிற் போகும் புகைவண்டி யூர்ந்தவ

ஞதியிகுக முறையரும் பொருளருணையை
வீதியில் நேராய் விளங்கிடக் கண்டனன்

## திருவருணை சேர்தல்

28. கல்லாய்த் தோன்று மக்கனம் பெறுமருணையோர்
சொல்லாய் விளங்கிடுஞ் சுவானு பவத்தோர்க்
கல்லால் உருகுமோ வந்நவ நீதம்போற்
கல்லாய் நெஞ்சது கரையா தவர்க்குமே

29. அன்பான பாலனும் இன்பான வுருவன்
என்பெலா முருகியங் கேஹுதரன் கண்டனன்
என்விண்டானெனை யானெடுத் துரைக்கவவ்
வன்பு மென்னுள்ளு முதித்திடுங் காலன்றே

30. சந்நிதி வந்தான் சாந்த மடைந்தான்
அந்நிய மில்லாதகம் நைந்துருகினன்
உன்னதாஞ்ஞையா லுற்றேனிதோ வெனச்
சொன்னன் தந்தை யெனுஞ் சுதந்திரத்தினல்

31. பிக்ஷாடகன் பரமன் அக்ஷரன் அமலன்
தக்ஷணம் ஏதுதான் தந்தனன் கையில்
வீக்ஷண மின்றியே வேறெது மில்லனுய்ச்
சிக்ஷண மாக்கிக் கடாக்ஷித்தா னன்றே

## சன்னியாசம்

(கும்மி)

32\. உலகுக்குபகார வுருவொன்று பூண்டான்
உயரதிவர்ணு சிரமக்கிரமத்தால்
உன்மத்தனைப் போலுணர் வொன்றுமின்
உண்ணல் உறங்கலு மொன்றுமில்லை [றியே

33\. பையனென்றும் சிலர் பாலனென்றும்
மெய்யது நன்றாய் விளங்காராய்
விரட்டினரு ருட்டினர் மோன நிலையினைப்
புரட்டவே யாராலும் போகவில்லை

34\. அபிஷேகப்பாலை அன்பா யூட்டினர்
சிவாபிஷேகம் செய் ஆசாரியர்
சின்னசாமியெனப் பேர்தேர்ந்தவரும்
பெரியதோர் பயனதைப் பெற்றவரே.

## சத்தி நிபாதம்

35\. வாஹன மண்டபச் சந்துக்குள்ளேயவன்
குஹாரோஹணங் கொண்டபோதும்
சத்திநி பாத விசித்திரங்கள் தாம்
நித்தமும் மெத்த நிகழலாச்சு

## அதிவர்ஞ்சிரமம்

36. பிச்சையெடுக்கவே போனபின்பு அங்கே
பச்சையே பிச்சையும் போட்டாள்பார்
லச்சையும் வரவர நீங்கலாச்சு இனிப்
பிச்சையில் ருசியும் பேசலாச்சு

37. ஜாதிமதங்களுந் தாண்டிப்போச்சு எல்லா
ஜாதியுந் தானய்த் தோன்றலாச்சு
மிஞ்சும் பரதேசி கள்கூட்ட த்தில் மேவி
அஞ்சாமலேயவன் கலந்தாச்சு

## பழநி பரதேசி

38. பழனி யென்றொரு பெயர்படைத்த
கிழவனும் பரதேசி கிங்கரனய்
விழைவோடவன்செய் மிக்காதரவுகளைக்
கழறவே என்னலுந்தரமோ காண்

## ஹிம்சை

39. பன்னிழல் மரத்தடி பாதளலிங்கத்தில்
சின்னாள் தங்கியே சிறுபயல்கள்

கல்லாலெறிந்து கடுமை செய்தாரவர்
புல்லறிவு செல்லப் பூமியிலார்

தாய்வரவு

40. ஆட்டுக்குடிசையை ஆதாரமாய்ச்சில
நாட்கள் தங்கிப் பின்னுங்காங்கே
கட்கதீர்த்தம் பவழக்கல் மடத்தில்
வேட்கையுடன் தாய் வெதும்பி வந்தாள்

41. எந்த விதத்துமினி யாமுன்னைவிடோம்
மைந்தனே என்றவர் வருந்தலுமே
மாயை செய்தவர்தம்மை மயக்குவித்தான
மாயை தன்னை வென்ற மாமுனிவன் [வன்

ஸஞ்சாரம்

42. பக்தர்கள் பாரிற் பெருகிடவே திவ்ய
முக்தனிவனென்ன முடிந்திடவே
குத்திரம் செய்பவர் குன்றிவிட்டாரினிப்
பத்திரமாயது ஸஞ்சாரம்

43. விருபாக்ஷி குகைதனில் வாஸம்
விருக்ஷ சூத பிலத்தினிலும் வாஸம்

பச்சையின் கோயிலில் பக்தர்கள் தம்மோடு
சச்சரவற்றுப சாந்த வாஸம்

44. நடந்திடினும் நன்றிருந்திடினும் சதா
நல்லனு போகந்தான் நழுவவில்லை
கடுமையாய்க் கோடிக்க தண்டுகள் கொட்டினும்
கொடுமையைப் பொருட்டாய்க் கொள்ளவில்லை

45. புரண்ட தவர்மேல் கரடொன்று குன்று
முரண்டுகள் முட்டினர் சாமியார்கள் [போல்
இரண்டகம் எண்ணினரீன குணத்தவர்
உருண்டோடிப்போனார்கள் ஊரறிய

## பக்தர்கள்

46. வாஸுவென்னுமோர் வரகுணனும்
சேஷனென்னுமொரு சீர்கணனும்
கணபதி யென்றோர் கவிவரனும்
கணேமனும் வழுவாக் கங்காதரனும்

47. சிவய்யா ஈசுவர ரிருவரும் சீராகச்
சிவயோகம் பூண்டார்கள் சின்னாளில்
சீலவதி லக்ஷ்மி வேணுவலங்காரி
சிறப்பாகத் தொண்டுகள் செய்துவர

48. அரிசி தீட்டின தவிட்டையறியாமல்
அன்பாய் ஓர்பெண் அன்றளிக்க
இன்போடருந்தியே ஈட்ஸித மீந்தனன்
அன்னையினினிய அருளாளன்

49. பலவகைக் கீரையைப் பக்குவங்கள் செய்து
பண்பா யோர் கிழவி பரிமாறவே
பச்சையும் அன்றிட்ட பிச்சைக்கு மேலாய்
இச்சையுடனுண்டு மெச்சினன் பார்

50. அணிலெலி குரங்கும் அளிகிளி விலங்கும்
அன்பார்ந்திடும் நல்லாப்தர்களாம்
அரவோடவனூர் மயிலுமே தாம்கூடி
அங்கு பத்தி விளையாடினவே

51. சின்னஞ் சிறுமி யகிலாண்ட வல்லி
சிவத்திற் கலந்த சீட்டதனைக்
கண்டு மனது கரைந்துருகி யாறுய்க்
கண்ணீரை யின்னஞ் சொரிகின்றார்காண்

52. கீரியுருவங் தாங்கிக் கீழிருந்தொன்று
கிரிமேல் கிர்ரென ஓடிவந்து
ஆரு மிலக்கின்றித் தாவியவர் மேலே
ஊரும் உள்ளன்பைச் சொரிந்ததுவே

## அட்சரமணமாலே

53. அட்சரமண மாலே யாண்டிசளுக்காக
இட்சுரஸர் போல விட்சணித்தான்
ஐயன் எனுமாண்டித் துய்யன் செய்யுங்
[கானட
மெய்யுஞ்சிலிர்த்திடும் எவர்க்கு மெய்யே

## ரமண கீதை

54. அந்நாளி லர்ச்சுனன் தன்பொருட்டாகவே
சொன்னதோர் கீதையின் சூட்சுமத்தைப்
பின்னுஞ் சுளுவாய்க் கணபதி பேணவும்
தன்னனு போகமாங் கீதை தந்தான்

## அயல் நாட்டார்

55. ஸேது ஹிமாசல தேசங் கடந்து தான்
ஸைந்தவ ஸாகர மூங் கடந்து
ஆங்கில நாட்டின் ஓர் அரசாங்கத் தலைவன்
அப்பரீஸ் என்றொரு அன்பனுண்டு

56. ஜே ஸ்ரீரமண வெனும் மந்திரமது
ஜெயத்தைத் தரும் நல்ல ஜீவமந்திரம்
அதனையே ஆகாயப் போர்களிலே கொண்டு
ஆபந் நிவாரண முற்றனன்றோ!

## கந்தாச்சிரமம்.

57. கந்தனெனு மோர் கடுவைராக்கியன்
நந்தனாரந்த நாட் செய்ததைப் போல்
சொந்த வுழைப்பிற் சோர்வின்றித் தான் [செய்ததே
கந்தாச்ரம மெனக் காணலாச்சு.

58. அன்னவன் கொண்டிட்ட எண்ணந்தானே [வன்றி
அன்னிலம் பாவன மாகத்தானே
உன்னத மேடை யொன்றோங்கியதங் கதில்
உன்னிப் பலபேருஞ் சேர்ந்துழைத்தார்.

59. பக்த தரனேசர்கள் பாரிலானோர் மேன்மேல்
பகரவொண்ணா தென்னாற் பகுத்துரைக்க
நித்தந்தானிமைகளெத்தனை யாகுமோ
அத்தனை அன்பர்களும் வாழி.

## அழகம்மை முக்தி.

60. துந்துபி வைகாசி பஹுளா நவமியில்
ஐந்து சடிகை யிர வளவில்
மைந்த ரிருவரும் மறறுள தொண்டரும்
துந்துபி நாதம் போல் தோத்தரிக்க.

61. வாம ஹஸ்தந்தனை வைத்துத் தலைமேலே
மற்ருே ரஸ்தம் மார்பின் மேலே வைத்து
ஸ்ரீமஹாத்மாசன சித்சுக மாக்கினன்
ஸ்ரீமதி அன்னை யழகம் மையை.

---

## அழகன்னை சமாதிப் பத்து.

1. அம்மை யுடலை அனைவருங் கூடியே
அம்பலாக் கொத்தி னருகிலே—செம்மைச்
சமாதியின் சம்பிரமப் பத்து நாம் சாற்றச்
சமாதிசம் பத்து முறும்.

2. சிவத்திற் கலந்தோ ருடலைத் தகித்தல்
சிவன் கோயிலைச் சுடலே யென்ன—அவ
[னிப்

பவத்தைத் தவிர்க்கப் பகர்கீதை ஸ்வானு
பவத்தி லனுசரித்தான் பார்.

3. நன்றுநன் றென்னக் கணமுனிவ ராதியோர்
பொன்றிய வன்னை தன் பொன்னுடலைக்—
குன்றுபோ
லோங்க விருத்தி யுயர்நா ரணிக்குச்சந்த
வாங்கு நிவேதனஞ் செய்தார்.

4. அருணை யகத்திற்சேர் அன்னைக்கென்
றேஷம்]
மருளை யகற்றிவிடும் மாண்பீர்—ஒருநாளு
மில்லாப் பசி பசிக்கு தென்னக் குதுகல
பல்லாருடன் புசித்தான் பார். [மாய்ப்

5. மக்களிருவர் மயக்கமதின் றியே
மிக்ககத்திற் பொங்கியெழும் மெய்யன்பால்
—நெக்குருகித்
தேவாரம் பாடித் துதித்தனரி ராமுழுதுந்
தேவரெல் லாம்புகழவே

6. வையகங் காணுமுன் வைகறையிற்
கொண்டுபோய்]
வையுங் குழியினிடை யென்னவே—
(ஐயருரை

நல்லதெனமே லெடுத் தங்கு சென்றிடினும்
மொல்லெனவே மொய்த்ததா மூர்.

7. குமரியாங் கோதை குறுகினா ளாங்கு
குழறினாள் கோவென்றலறித்—தமரிலே
தாய்க்கிணை யாகத் தரணியி லேயவட்கு
வாய்க்குமோ வேறொருவர் மற்று.

8. கல்லெனவே நெஞ்சங் கரையாது கள்ளஞ்
[சேர்
புல்லறிவோ னுமென் புலவிழிமுன்—நல்ல
[பெரும்
பில்லநிறக் காளைமேற் பேணுபசுங் கிள்ளை
யென்]
செல்வத்தாய்க் காட்சி தெரிந்தேன்.

9. அனைவருங் கூடினார் ஆர்ப்பரித்தார்
தங்கள்]
அனையெனக் கொண்டாடி அங்கு—நனை
மலர்த்தீந்
தேனபி ஷேகித்தா ரர்ச்சித்தார் பொங்கி
வரும்
ஆனந்த வாரிதியி லாழ்ந்து.

10. சப்பனரும் பேதையரும் சாதுச்சள் பக்த
ரும்]
சம்ப்ரமத்தோ டெல்லோரும் சார்ந்தார்
பின்—செம்மை]
உலகோர்க் கிதமாய் உகந்த சமாதி
நிலைவைத்தார் வாழியவே நீடு.

---

ராகம்—வசந்தா.

சரம கவி.

பல்லவி.

அழகன்னை அன்பினிற் கரைந்தாள்
புகழடைந்தாள் திருவருணையில் (அழ)

அனுபல்லவி.

தழல் மெழுகென்னத் தன்னைத்
தானுன ரமணனைத்
தனயனைப் பெற்ற பெரும்
புண்ணியவதியான (அழ)

சரணம்.

1. வினைச்சுழி தனைத் தவிர்க்கும்
திருச்சுழிக் கொளி வினை

உயர் குல வேதியன் சுந்தரற்குறுமனை
தானே கட்டழகி தனலமே சுந்தரன்
தன் மகவெனியினைத்தானே
சண்டு வந்திட்ட (அழ)

2. தலைமுறை தவறாது தத்துவஞானியர்
குலசைதியுத்தமி தழைத்திடுங் குலமது
தவம் பழுத்துதிர்த்திடத் தரணியிலிறங்
கிய
பிரேமையே யுருவான அபிராமி யென்
தாயாம் (அழ)

3. உயர்ந்து தாரகம் இரவைந்தில் கோஷிக்க
உலகாசிரியன் அத்தத்தா லாகர்ஷிக்க
துந்துபி வைகாசி பகுள நவமியதில்
தொண்டர்கள் பலர் சூழத் தழுதழுத்திட
வெங்கள் (அழ)

இராகம் பைரவி.

பல்லவி.

எனக்குறு மிடிதன்னை இன்னமுந் தீர்க்கா
திருப்பதேது என்னம்மா

அனுபல்லவி.

தனக்கொரு நிகரில்லா அசலமாயோங்கிய
அருணையில் நிச்சலத் தவக்கோலங்கொண்ட
பச்சை (எனக்)

சரணம்.

1. [illegible] கொடும்பிணி பிணிக்குளே பிணிகளால்
வாடிவருந்துகின்றேன்.
மனதோ மஹாமாயம் மாயைக்குள்
நினைவுகள் மயக்குதே மதியினையே
மருந்தென அருந்திட மலை மருந்தா யிங்கு
இருந்திடும் விருந்தெனத் தெரிந்துனைச் சார்ந்
[துளேன்
உன்மன மசைந்திடில் உலகெலாமசைந்திடும்
உன்திற முரைக்கவே உண்மையிலார்தமம்
மின்னொளியென மிளிர் சொர்ணமே அற்புதப்
பெண்ணுருவாகியிம் மண்ணினிற் கன்னையே
(எனக்குறு)

2. என்குறை நீங்கவோர் நன்னினைவுகொண்டால்
உன்தவம் குறைவுறுமோ
அங்ஙனமாயினும் அண்டையில் வேதியன்
உன் மகன் உளனலனோ
பன்முறையுழினைப் பரிதிமுன் பனிபோலப்
பறக்கடித் தெனைக்காத்த திறத்தையும்
[மறப்பேனோ
பட்டமாத்தினிற் பாலுறுந்திருஷ்டியால்
இஷ்டமதாகினிற் கஷ்டமொன்றுளதேது
மட்டிலாதபுகழ் அஷ்ட திசைகளிலும்
எட்டி நாட்டிய பிராட்டி சீமாட்டி (எனக்குறு)

இஃது

# ஸ்ரீ பகவான் ரமண

பாதசேவகன்

மனவாசி

ராமஸ்வாமி அய்யரால்

பாடப் பெற்றது.

இரண்டாம் பதிப்பு.

---

1938.